பழைய புத்தகம்

## பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த

# நவரத்னமாலை

ஶரணாகதனானவன் தன்னையும், தனக்கு விரோதியான தேஹத்தையும், தேஹத்தைப் பற்றிவரும் பந்துக்களையும், ஸம்ஸாரிகளையும், தேவதாந்தரங்களையும், ஸ்ரீவைஷ்ணவர்களையும், ஆசார்யனையும், பிராட்டியையும், ஈஶ்வரனையும் நினைத்திருக்கும்படி எங்ஙனேயென்னில்;

---

சரணாகதனென்றது எம்பெருமானே உபாயோபேயமென்று பிரார்த்திக்கிற புத்தியுடையவன் என்றவாறு. தன்னையும் என்றது சரணாகதன்றன் ஆத்மாவையும் என்றவாறு. தனக்கு விரோதியான தேஹத்தையும் என்றது ஆத்மாவுக்கு விரோதியான தேஹத்தையும் என்றவாறு. "சரீரமாத்யம் கலுதர்மஸாதநம்" ஆத்மாவுக்கு ஸத்கார்மங்களைச் செய்வதற்குச் சரீரம் சாதனமாயிருக்குமென்று சொல்லப்பட்டுள்ளது. அங்ஙனமிருக்க இங்குச் சரீரத்தை விரோதியாகச் சொல்லலாமோவென்னில்; ஆத்மா தனியே இருந்து ஒரு காரியத்தையும் செய்யமாட்டாது. தேகத்தைப் பெற்றே எல்லாக் காரியத்தையுஞ் செய்யும். ஆனதுபற்றிச் சரீரம் தர்மஸாதனமாகச் சொல்லப்பட்டது. சரீரத்தின் இயல்பை ஆராயுமிடத்து அது மிச்ரத்த்வத்தினால் ஆக்கப்பட்டபடியால் ஆத்மாவுக்கு விரோதியாயிருக்கும். விரோதியான சரீரத்தைப் பெற்று ஆத்மா அநுகூலத்தை எவ்வாறு பெறுவதென்னில்; அறிஞரோடிணங்கியிருப்பதாலும், சாஸ்த்ர ச்ரவணத்தாலும், மனத்தைப் பொறி வழியிற் செல்லவொட்டாமல் அடக்கி ஒழுகினால் சரீரத்தினால் நற்பயனையடையலாமாதலால் பொருந்துமென்க. நாவானது தனக்குப் பகையாயிருக்கிற பற்களைக் கொண்டே ருசியை அறிவது போல விரோதியான சரீரத்தைக் கொண்டே ஆத்மா நற்பயனையடையத் தடையில்லை. தேகத்தைப் பற்றிவரும் பந்துக்களையும் என்றது சரீரசம்பந்தமாக வருகிற உறவினர்களையும் என்றவாறு. என்னைப் பெற்றார், பெறுவித்தார். எனக்கு உற்றார் என்பதெல்லாம் சரீரசம்பந்தமாக வருவதாதலால் சரீரத்தைப் பற்றி வருகிற பந்துக்கள் என்று சொல்லப்பட்டது. ஸம்ஸாரிகளையுமென்றது ஜனன மரண முதலான பெருந்துன்பங்களிற் கிடந்துழல்கின்றவர்களென்றவாறு. தேவதாந்தரங்களையும் என்றது பிரம்ம ருத்ராதி தேவர்களையும் என்றவாறு. ஸ்ரீவைஷ்ணவர்களையும் என்றது ஞானபக்தி வைராக்யமுடைய எம்பெருமானது ஸம்பந்திகள் என்றவாறு. ஆசார்யனையும் என்றது, தனக்கு நல்லுபதேசங்களைச் செய்து எம்பெருமானைப் பற்றும்படி செய்யும் ஆசார்யனையும் என்றவாறு. பிராட்டியையும் என்றது ஆத்மாக்கள் செய்த அபராதங்களைப் பொறப்பித்து எம்பெருமானிடத்திற் சேர்க்கும் பரமோபகாரியான ஸ்ரீதேவியையும் என்றவாறு. ஈசுவரனையும் என்றது ஸமஸ்த ஐச்வர்யங்களையுமுடைய எம்பெருமானையும் என்றவாறு. நினைத்திருக்கும்படி எங்ஙனேயென்னில் என்றது இவர்களை எவ்வெவ்வாறு கருதிக் கொண்டிருப்பதென்றவாறு. இவர்களது உண்மை நிலையறிந்து அவ்வவரை அறிந்தபடி கருதிக் கொண்டிருக்க வேண்டுமென்பது கருத்து.

---

**1926**ம் வருடம் 'ஹரிஸமய திவாகரம்' என்ற பத்திரிகையில் வெளிவந்த கட்டுரை

(1) உடம்பில் வேறுபட்டு நித்யனாய், ஒருபடிப்பட்டு அணுவாய், ஜ்ஞாநத்தையும், ஆநந்தத்தையும் வடிவாகவுடையனாய், ஜ்ஞாநத்துக்கும் ஆநந்தத்துக்கும் இருப்பிடமாய், எம்பெருமானையொழிய வேறொன்று நினைத்தல் சொல்லுதல் செய்யமாட்டாதே எம்பெருமானுக்கே உரியனாய், தன் கார்யத்திற்குத் தான் கடவனன்றிக்கே அவனையே பலமாக உடையனாய் இருக்குமென்று தன்னை நினைப்பான்.

(2) தன்னையுள்ளபடி அறியவொட்டாதே விபரீதஜ்ஞானத்தை ஜநிப்பித்து இருபத்துநாலு தத்வங்களினுடைய திரளாய், அநித்யமாய், எப்போது மொக்கப்

---

(1) உடம்பில் வேறுபட்டு நித்யனாய் என்றது உடம்பு பிறத்தல் வளர்தல் தேய்தல் மரித்தல் என்ற இயல்புகளையுடையதாயிருக்கும். இவ்வியல்பின் வேறுபட்டு என்றுமுள்ள என்றவாறு. ஒருபடிப்பட்டு அணுவாய் என்றது வளர்தல் தேய்தல் முதலிய விகாரப்பாடில்லாமல் எப்பொழுதும் ஒரு தன்மைத்தாயிருக்கும் அணுவடிவினானா யென்றவாறு. நெல்லின் நுனியை நூறு கூறிட்ட ஒரு கூற்றை நூறு கூறு செய்த ஒரு கூறு எவ்வளவு அளவுடையதாயிருக்குமோ அவ்வளவுடையதை அணுவென்று வழங்குவார்கள். ஜ்ஞாநத்தையும் ஆநந்தத்தையும் வடிவாகவுடையனாய் என்றது ஜ்ஞாநாநந்த ஸ்வரூபனாய் என்றவாறு. ஜ்ஞாநத்துக்கும் ஆநந்தத்துக்கும் இருப்பிடமாய் என்றது ஜ்ஞாநாநந்தங்கட்கு ஆதாரமாய் என்றவாறு. தீபம் ஒளி என்ற இரண்டும் ஒளியுடைப் பொருள்களாயிருந்தாலும் தீபம் ஒளிக்கு இருப்பிடமாயிருப்பது போல ஆத்மா ஜ்ஞாநாநந்த வடிவினனாயிருக்கச் செய்தேயும் தனக்குத் தர்மமாயிருக்கின்ற ஜ்ஞாநம் தன்னையொழியப் பிரிந்து நிற்றற் கியலாதபடி அதற்கு ஆத்மா ஆதாரமாயிருப்பானென் றறியத்தக்கது. எம்பெருமானையொழிய வேறொன்று நினைத்தல் சொல்லுதல் செய்யமாட்டாதே எம்பெருமானுக்கே உரியனாய் என்றது எம்பெருமான் அந்தர்யாமியாய் (உள்ளேயிருந்து நியமிப்பவனாய்) இல்லாதொழிவனேல் ஜீவன் நினைத்தல் சொல்லுதல் முதலிய வியாபாரங்களற்றவனாய், எம்பெருமானுக்கே அடிமையாதற்கு உரியனாயிருப்பான் என்றவாறு. தன் கார்யத்திற்குத் தான் கடவனன்றிக்கே அவனையே பலமாகவுடையனாயிருக்கும் என்றது தன்னுடைய (ஆத்மாவினுடைய) காரியத்தைச் செய்து கொள்வதற்குத் தானுரியவனன்றிக்கே அவனையே பிரயோஜனமாகவுடையனாயிருப்பான் என்றவாறு. ஆத்மா முயன்று செய்கிற காரியத்தில் ஸர்வேச்வரன் அநுமதி செய்யாதபோது அக்காரியம் ஸித்தியாதொழியும், ஜீவனுடைய காரிய ஸித்திக்கும் அவனுடைய அநுமதியே காரணமாயிருத்தலால் இங்குத் தன் காரியஸித்திக்குத் தான் கடவனன்றிக்கே என்று சொல்லப்பட்டது. தன்னை நினைப்பான் என்றது ஆத்மாவினுடைய உண்மை நிலையிதுமாதலால் இங்ஙனம் நினைக்கக்கடவன் என்றவாறு.

(2) தன்னையுள்ளபடியறிய வொட்டாதே என்றது ஆத்மா எம்பெருமானுக்கடிமையாயிருப்பான் என்ற உண்மையை அறிய வொட்டாமல் என்றவாறு, விபரீத ஜ்ஞாநத்தை ஜநிப்பித்து என்றது ஆத்மா ஸ்வதந்தரன் என்ற உணர்வைப் பிறப்பித்து என்றவாறு. இருபத்துநாலு தத்வங்களின் திரளாய் என்றது இருபத்துநான்கு தத்வங்களின் கூட்டமாய் என்றவாறு. இருபத்து நான்கு தத்வங்களாவன– ப்ருதிவீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம் என்ற ஐந்து பூதங்களும், வாக்கு பாணி பாதம் பாயு உபஸ்தம் என்ற ஐந்து கர்மேந்திரியங்களும், மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து ஞானேந்திரியங்களும், சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற ஐந்து விஷயங்களும், ப்ரக்ருதி, மஹாந், அஹங்காரம், மனஸ் என்ற நான்கும் ஆக இருபத்துநான்காம். "பொங்கைம்புலனும், பொறியைந்தும் கருமேந்திரியமைம்பூதம், இங்கிவ்வுயிரேய் பிரகிருதி மானாங்கார மனங்களே" என்ற ஆழ்வாரருளிச்

**பரிணமிக்கக் கடவதாய் ஒருநாளும் ஜ்ஞாநத்துக்கு இருப்பிடமன்றிக்கே அநந்த துக்கங்களை விளைப்பிக்கக் கடவதாய், ஶப்தாதி விஷயங்களிலே மூட்டி நஶி ப்பிக்குமென்று தன் தேஹத்தை நினைப்பான்.**

**(3) ஆத்ம ஜ்ஞாநத்தையும் பகவத் ஜ்ஞாநத்தையும் பகவத் விஷயத்தில் ருசியையும் த்வரையையுங் குலைத்து, தேஹாத்மாபிமானத்தையும், அஹங்கார மமகாரங்களையும், காமக்ரோதாதிகளையும் விளைப்பித்து, பல படியாலும்**

---

செயலு மிக்கறியத் தக்கது. அநித்யமாய் என்றது அறிவுடையதா யென்றவாறு. எப்போது மொக்கப் பரிணமிக்கக் கடவதாய் என்றது எல்லாக் காலங்களிலும் விகாரத் தோற்றமுடையதாய் என்றவாறு, தேஹம் எப்பொழுதும் ஒருபடிப்பட்டிராதென்பதாம். ஒருநாளும் ஜ்ஞாநத்துக்கிருப்பிடமன்றிக்கே அநந்த துக்கங்களை விளைப்பிக்கக் கடவதாய் என்றது ஒருநாளேனும் அறிவுக்கிருப்பிடமன்றிக்கே கணக்கற்ற துக்கங்களை விளைப்பிக்குமதாய் என்றவாறு. சப்தாதி விஷயங்களிலே மூட்டி நசிப்பிக்குமென்றது ஆத்மாவைப் புலன்களை (சுவை ஒளி ஊறு ஓசை நாற்றங்களை) நுகரும்படி செய்து கெடுக்கும் என்றவாறு. ஆத்மா மனத்தின் வழியாகச் சென்று இந்திரியங்களிற்புகுந்து புலன்களை அநுபவித்துக் காலத்தைப் போக்குவானேல் ஒரு பொழுதும் ஈடேறமாட்டான். இதுபற்றி நசிப்பிக்குமென்று சொல்லப்பட்டது. ஆதலால் இங்கு நசிப்பிக்கு மென்பதற்குக் கொல்விக்குமென்று பொருள் கொள்ளாது, ஆத்மாவின் ஸ்வரூப இயல்புகளை மாற்றுவிக்கும் என்று பொருள் கொள்ளத்தக்கது. தன் தேகத்தை நினைப்பானென்றது தன் தேகமானது எப்போதும் விரோதத்தைச் செய்யும் இயல்பினையுடையதென்று நினைக்கக் கடவனென்றவாறு.

(3) ஆத்மஜ்ஞாநத்தையும் என்றது ஆத்மா எம்பெருமானுக்கு அடிமையாயிருப்பானென்ற ஆத்ம விஷய ஜ்ஞானத்தையும் என்றவாறு. பகவத் ஜ்ஞாநத்தையும் என்றது எம்பெருமான் சேஷியாய் (தலைவனாய்) இருப்பானென்ற பகவத்விஷய ஜ்ஞாநத்தையும் என்றவாறு. பகவத் விஷயத்தில் ருசியையும், த்வரையையும் குலைத்து என்றது ஈச்வர விஷயத்தில் மிகுந்த பிரீதியையும் அது காரணம் உண்டாகிற விரைவுடைய புத்தியையும் கெடுத்து என்றவாறு, ஈச்வர விஷயத்தில் மிகுந்த பிரீதி உண்டாகுமேல் அது காரணமாக அவனையடைந்தல்லது தரிக்க வொண்ணாத விரைவுடைய புத்தியுண்டாகும். இவை உண்டாவதற்கும் பந்துக்கள் தடையாயிருப்பார்களென்பது கருத்து. தேஹாத்மாபிமானத்தையும் என்றது அழியுமியல்பினதாகிய சரீரமே ஆத்மா என்ற அபிமானத்தையும் என்றவாறு. அஹங்காரமமகாரங்களையும் என்றது யான் எனது என்கிற அஹங்காரமமகாரங்களையும் என்றவாறு. இந்த அஹங்காரமமகாரங்களைப்பிறவிக்கு வித்து என்பர்கள். இந்த துர்க்குணமொழியும் வரையிலும் பிறப்பும் ஒழிவதில்லை. இதனால் ஆழ்வாரும் "நீர் நுமதென்றிவை வேர் முதல்மாய்த்து இறை சேர்மின்" என்று உபதேசித்தார். காமக்ரோதாதிகளையும் விளைப்பித்து என்றது வேட்கை கோபம் முதலியவற்றைப் பிறப்பித்து என்றவாறு. "ஸங்காத் ஸம்ஜாயதே காம: காமாத் க்ரோதோபிஜாயதே, க்ரோதாத்பவதி ஸம்மோஹ: ஸம்மோஹாத் ஸ்ம்ருதி விப்ரம: ஸ்ம்ருதி ப்ரம்சாத் புத்திநாசோ புத்திநாசாத் ப்ரணச்யதி" என்று கண்ணபிரான் கீதையில், விஷயங்களிற் பற்றுண்டானால் ஆசையும், அதனால் கோபமும், அறிவின்மையும், அதனால் நினைவு மாறுபடுதலும், அதனால் புத்தி நாசமும், அதனால் ஸம்ஸாரத்தில் அழுந்துதலும் உண்டாகுமென்று அருளிச் செய்தான். இந்த துர்க்குணங்களெல்லாம் உண்டாவதற்கு உறவினர்களே காரணமாயிருப்பார்கள் என்று அறியத் தக்கது. பலபடியாலும் அநர்த்தத்தைப் பண்ணுவார்களென்றது இன்னும் பலவகையாலும் கெடுதியை உண்டுபண்ணுவார்கள் என்றவாறு. தேஹத்தைப் பற்றி வருகிற

**அநர்த்தத்தைப் பண்ணுவார்களென்று தேஹத்தைப் பற்றி வரும் பந்துக்களை நினைப்பான்.**

**(4) பகவதநுபவத்துக்கும் பகவத்கைங்கர்யத்துக்கும் விரோதிகளாய் ஸம்ஸார வர்த்தகராயிருப்பார்களென்று ஸம்ஸாரிகளை நினைப்பான்.**

**(5) அஜ்ஞராய், அஶக்தராய், எம்பெருமான் பக்கலிலே பிறந்து, அவன் கொடுத்து பதங்களையுடையராய், அவனோடே எதிரிட்டுத் துர்மானிகளாய், தங்களைப் போரப் பொலிய நினைத்து நாட்டாரை ப்ரமிப்பித்து அநர்த்தத்தைப் பண்ணுவார் சிலரென்று தேவதாந்தரங்களை நினைப்பான்.**

---

பந்துக்களை நினைப்பான் என்றது சரீர சம்பந்தத்தால் வருகிற உறவினரை இங்ஙனம் கருதக் கடவன் என்றவாறு.

(4) பகவதநுபவத்துக்கும் என்றது எம்பெருமானுடைய குணாநுபவத்திற்கும் என்றவாறு. பகவத் கைங்கர்யத்துக்கும் விரோதிகளாய் என்றது ஈச்வரவிஷயமான பணியிடைகட்கும் விரோதிகளாய் என்றவாறு. ஸம்ஸாரவர்த்தகராய் என்றது, ஜன்ம மரணாதிகளிற் கிடந்துழல்வதை விருத்தி செய்பவராய் என்றவாறு. ஸம்ஸாரிகளை நினைப்பான் என்றது ஸம்ஸாரிகளை இவ்வாறு கருதக்கடவன் என்றவாறு.

(5) அஜ்ஞராய் என்றது அறியாதவராய் என்றவாறு. அசக்தராய் என்றது, சக்தியற்றவராய் என்றவாறு. எம்பெருமான் பக்கலிலே பிறந்து என்றது ஸர்வேச்வரனிடத்திலுண்டாகி என்றவாறு. "நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனைத்தான் படைத்தான்" என்றதனால் இதர தேவதைகள் எம்பெருமானிடத்தில் தோன்றியவர்களென்று நன்கறியலாம். அவன் கொடுத்த பதங்களையுடையவராய் என்றது எம்பெருமானால் கொடுக்கப்பட்ட ஸ்தானங்களையுடையராய் என்றவாறு. அவனோடே எதிரிட்டுத் துர்மானிகளாய் என்றது எம்பெருமானோடே எதிர்த்துப் போராடும் கெட்ட அபிமானமுடையவராய் என்றவாறு. வாணாசுர யுத்த காலத்தில் ருத்ரனும், பாரிஜாத புஷ்பத்தைக் கொய்து வருகிற காலத்தில் இந்திரனும் எம்பெருமானோடு எதிர்த்துப் போராடினமை அறியலாம். தங்களைப் போரப்பொலிய நினைத்து என்றது 'என்னால் லோகம் சிருஷ்டிக்கப்படுகிறது, நான் சிருஷ்டி கர்த்தா, நான் ஸம்ஹார கர்த்தா' என்று தம்மை மிகவும் பூர்ணமாக நினைத்து என்றவாறு. நாட்டாரை ப்ரமிப்பிப்பது என்றது, அறிவிலிகள் பிரம்ம ருத்ராதிகளே பரதேவதை யாவார்கள் என்று மயங்கும்படி செய்து என்றவாறு. நாட்டாரென்பது ஈண்டு இலக்கணையால் அறிவிலிகளையுணர்த்தும். "நாடுநகரமும் நன்கறிய" என்றவிடத்திற் பெரியார் நாடென்பதற்கு அஜ்ஞரென்று பொருளுரைத்தமையுங் காண்க. இதனால் நாகரிகர்களாகிய பேரறிவாளரைப் பிரம்ம ருத்ராதிகள் மயப்பிக்க வல்லுநராகாரென்பது குறிப்பு. ருத்ரன் ஆகமங்களைப் பிறப்பித்து அதில் தன்னையே பரதேவதையாகக் கூறியதினால் அறிவிலிகள் பலர் ருத்ரனே பரதேவதையென்று மயங்கிப் பற்றுகிறார்கள். இதனால் இவர்கள் ஆகமவாயிலான நாட்டாரை மயப்பிக்கிறார்களென்று நோக்கத் தக்கது. அநர்த்தத்தைப் பண்ணுவார் சிலர் என்றது கெடுதியை விளைவிப்பார் சிலர் என்றவாறு. பரதேவதையல்லாத தம்மைப் பரதேவதையென்று மதிக்குமாறு நாட்டாருக்கு மயக்கவுணர்வைத் தந்து அதனால் அவர்கள் ஸம்ஸாரத்திற் கிடந்துழலும்படி செய்கின்றார்களாதலால் அநர்த்தத்தைப் பண்ணுவார் என்று சொல்லப்பட்டது. தேவதாந்தரங்களை நினைப்பான் என்றது எம்பெருமானுக்குப் புறம்பான தெய்வங்களை இவ்வாறு கருதக்கடவன் என்றவாறு.

(6) பகவத் ஜ்ஞாநத்துக்கும் இதரவிஷய வைராக்யத்துக்கும் பகவத் பக்திக்கும் வர்த்தகராய், ஶேஷிகளாய், உசாத்துணையாய், ப்ராப்யத்துக்கு எல்லை நிலமாயிருப்பார்களென்று ஸ்ரீவைஷ்ணவர்களை நினைப்பான்.

(7) தன் கடாக்ஷத்தாலே என்னைத் திருத்தி, ஸர்வேஶ்வரன் கைக்கொள்ளுகைக்கு யோக்யனாம்படி பண்ணி, அவன் திருவடிகளிலே சேர்த்து,

---

(6) பகவத் ஜ்ஞாநத்துக்கும் என்றது எம்பெருமானே உபாயோபேயமாவான்; அவனே எல்லா உறவுமுறையுமாவான் என்ற ஈசுவர விஷஜ்ஞாநத்துக்கும் என்றவாறு. இதர விஷய வைராக்யத்துக்கும் என்றது சப்தாதி விஷயங்களில் ஆசையறுகைக்கும் என்றவாறு. மனம் இந்திரியங்களின் வழியாகச் சென்று விஷயங்களை யநுபவித்துத் திரியுமாகில் ஈசுவர விஷயத்திற் பேரன்பு பிறப்பதரிதாகுமாதலால் ஈசுவர விஷயமான பக்தியுண்டாவதற்குமுன்பு இதரவிஷய வைராக்யமுண்டாக வேண்டுமென்பது பெறப்பட்டது. பகவத் பக்திக்கும் வர்த்தகராய் என்றது ஈசுவர பக்தியையும் வ்ருத்தி செய்யுமவராய் என்றவாறு. சேஷிகளாய் என்றது தலைவர்களாய் என்றவாறு. எம்பெருமானே பரமசேஷியாகவிருந்தாலும் அவன் தன்னடியார்களைச் சேஷியாகக் கொண்டொழுகாதபோது ஜீவன்றன் அடிமைத்திறம் ஸித்திப்பதில்லையாதலால் அவர்களை ஸ்வாமியாகக் கொண்டொழுக வேண்டுமென்பது தெளிவாகிறது. இதுபற்றியே ஆழ்வாரும் "எம்மையாளும் பரமரே" என்றும், "எம்மையாளுடை நாதரே" என்றும், "எம்தொழுகுலந்தாங்களே" என்றும், "எம்மடிகளே" என்றும் அருளிச் செய்தார். உசாத்துணைகளாய் என்றது அளவளாவுந்துணைவர்களாய் என்றவாறு. இவ்வுலகத்தில் அடியார்கள் துணைவராயிருப்பது மாத்திரமன்றிக்கே வீட்டுலகமும் "அடியார் நிலாகின்ற வைகுந்தம்" என்றபடி அடியார்கள் விளங்கப் பெற்ற தொன்றாதலால் ஆங்கும் இவர்களே துணைவராயிருப்பார்கள். "புணைகொடுக்கிலும் போகவொட்டா" தவரன்றோ! ப்ராப்யத்துக்கு எல்லை நிலமாயிருப்பார்களென்றது பிரயோஜனத்தின் அவதியிடமாயிருப்பார்களென்றவாறு. ப்ராப்யம் – அடையத்தக்கது. அஃதாவது கைங்கர்யம், எல்லை நிலம் – மேலெல்லையில்லாத வரம்பிடம். எல்லை நிலமானது முடிந்த எல்லையைக் காட்டுமோ, அதுபோல பாகவத கைங்கர்யமே கைங்கர்யத்தின் முடிவைக்குறிக்கும். அஃதாவது இதற்கு மேலுள்ளதொரு கைங்கர்யமில்லை என்றபடி. பாகவத கைங்கர்யத் தளவுமானாலொழிய பகவத் கைங்கர்ய பூர்த்தியில்லையாதலால் ப்ராப்யத்துக்கு எல்லை நிலமாயிருப்பார்களென்று சொல்லப்பட்டது. "அடியார்க்கென்னையாட்படுத்தவிமலன்" என்று பாண்பெருமாள், 'எம்பெருமான் என்னடிமைத் திறத்தை நிலைநிறுத்த என்னை அடியார்க்கு ஆட்படுத்தினான்' என்று கொண்டாடியது மிக்கறியத் தக்கது. ஸ்ரீவைஷ்ணவர்களை நினைப்பான் என்றது, ஸ்ரீவைஷ்ணவர்களை இவ்வாறு நினைக்கக் கடவன் என்றவாறு.

(7) தன் கடாக்ஷத்தாலே என்னைத் திருத்தி என்றது தன்னருள் நோக்காகவே என்னை நன்னிலையில் நிற்கும்படி செய்து என்றவாறு. ஸர்வேச்வரன் கைக்கொள்ளுகைக்கு யோக்யனாம்படி பண்ணி என்றது எம்பெருமான் அங்கீகரிக்கைக்குத் தகுதியுடையனாம்படி செய்து என்றவாறு. அவன் திருவடிகளிலே சேர்த்து என்றது எம்பெருமான் திருவடியை அடையும்படி செய்து என்றவாறு. அறியாதன அறிவித்து என்றது ஜ்ஞாநத் தெளிவைப் பிறப்பித்து என்றவாறு. ஆசார்யனால் உணர்த்தப்படுகிற ஜ்ஞாநத்தெளிவு வித்யாஜன்மமாகச் சொல்லப்படும். மாதா பிதாக்களாலாகும் சரீர ஜன்மத்தைக் காட்டிலும் இந்த வித்யாஜன்மம் சிறந்த தென்றறியத் தக்கது. ஸ்வாமியாய் என்றது சிஷ்யனது ஆத்மசொத்தையுடையனாய் என்றவாறு. "ஆசாரியன் சிச்சனாருயிரைப் பேணுமவன்" என்று இங்குச் சிஷ்யனுடைய உயிரை ஆசார்யன் பேணக் கடைமையுடையவனென்றிருப்பதால் சிஷ்யனுடைய உயிர் ஆசார்யன் சொத்தென்பதறியலாம். என்றுமொக்க அடிமைகொள்ளும்

அறியாதன அறிவித்து, ஸ்வாமியாய், என்றுமொக்க அடிமைகொள்ளும் மஹோபகாரகனென்று ஆசார்யனை நினைப்பான்.

(8) நம்முடைய ஸர்வாபராதத்தையும் பொறுப்பித்து, ஈச்வர ஸ்வாதந்தர்யத்தையுங்குலைத்து, அவனுடைய காருண்ய வாத்ஸல்யாதி

மஹோபகாரன் என்றது அறியாக்காலம் அறிந்தகாலம் என்ற வேறுபாடில்லாமல் எப்பொழுதும் ஒரு தன்மையாக அடிமை கொள்ளும் சிறந்த உபகாரன் என்றவாறு. அறியாதன அறிவித்து ஆத்மாவை எம்பெருமான்றன் திருவடியிற் சேர்த்து உய்விக்கச் செய்பவனாதலால் ஆசார்யன் மஹோபகாரனாவான். ஆசார்யனை நினைப்பான் என்றது ஆசார்யனை இவ்வாறு நினைக்கக்கடவன் என்றவாறு.

(8) நம்முடைய ஸர்வாபராதத்தையும் பொறுப்பித்து என்றது, நாம் செய்த எல்லாக் குற்றங்களையும் பொறுக்கும்படி செய்து என்றவாறு. எம்பெருமான் அபராதமுடைய சேதனனைக் கண்டு வெறுக்கின்ற காலத்தில் பெரிய பிராட்டியார் எம்பெருமானை நோக்கி 'அந்தோ! உலகத்தில் அபராதஞ் செய்யாதவர் யாருளர்? நீர் இப்பொழுது இந்தச் சேதனனை வெறுத்து அகற்றிவிட்டால் இவனுக்கு வேறு புகலிடம் யாதுளது? மேலும் நீர் இப்படி அகற்றினால் வேறெவர் தாம் உம்மை யடையப் போகிறார்கள்? இனி இவன் செய்த அபராதங்களிற் கருத்தைச் செலுத்தாமல் இவனை அங்கீகரித்தருளும்' என்று ஹிதமான சொற்களைக் கூறி பொறுக்கும்படி செய்வான். ஈச்வர ஸ்வாதந்தர்யத்தைக் குலைத்து என்றது எம்பெருமானுடைய ஸ்வாதந்தர்யகுணத்தை அகற்றி என்றவாறு. எம்பெருமான் தன் ஸ்வாதந்தர்ய குணத்தால் அபராதமுடைய சேதனனைச் சிஷிக்கத் துணிகின்ற காலத்தில் பிராட்டி, தன் வசனங்களால் அந்த ஸ்வாதந்தர்யத்தை யகற்றி விடுவாளாதலால் ஸ்வாதந்தர்யத்தைக் குலைத்து என்று சொல்லப்பட்டது. அவனுடைய காருண்ய வாத்ஸல்யாதிருணங்களைக் கிளப்பி என்றது ஸர்வேச்வரனுடைய அருள், வாத்ஸல்யம் முதலிய குணங்கள் வெளித் தோன்றும்படி செய்து என்றவாறு. அபராதமுடைய சேதனரைக் கண்டு எம்பெருமானுக்குச் சீற்றமுண்டானபோது அவனுடைய அருள் முதலிய குணங்கள் வெளித் தோன்றாமல் அடங்கிக் கிடக்கும். அப்பொழுது பிராட்டியார் ஸர்வேசுவரனை நோக்கி 'நீர் கருணையங்கடலாயும், அடியார்களின் குற்றங்களைப் போக்யமாகக் கொள்பவராயும் விளங்குகின்றீர் என்பது பிரஸித்தமன்றோ! இப்பொழுது இந்தச் சேதனர்களை உமது சீற்றத்திற்கு விஷயமாக்கினால் இவர்கள் உய்யும்வகை எங்ஙனம்? மேலும் இங்ஙனம் சீற்றங்கொள்வீரேல் இனிக் கருணையங்கடலென்று எங்ஙனம் விளங்குவீர்? இனியேனும் இவர்களுடைய அபராதங்களை உமது கருணை முதலிய குணங்கட்கு விஷயமாக்கிப் பொறுத்துக் கொள்வீர்' என்று இன்னுரை கூறியவுடன் முன் சீற்றத்தாலடங்கிக் கிடந்த கருணை முதலிய குணங்கள் வெளிப்படுமாதலால் வாத்ஸல்யாதி குணங்களைக் கிளப்பியென்று சொல்லப்பட்டது. நமக்குப் புருஷகாரபூதையாய் என்றது நமக்காக என்று பேசுமவளாய் என்றவாறு. ஈசுவரன் சேதனரது குற்றங்கண்டு வெறுத்தகற்றுகின்ற காலத்தில் இவர்களை எவ்வாறாவது அங்கீகரிக்க வேணுமென்று பல இன்னுரை கூறிப் பரிந்து சிபார்சு செய்வாளாதலால் புருஷகாரபூதையாய் என்று சொல்லப்பட்டது. மாதாவாய் என்றது தாயாய் என்றவாறு. ஸர்வலோக சரண்யனாகிற எம்பெருமானுக்குப் பத்நியாதலால் இவளும் ஸர்வலோகமாதாவாயிருப்பாள். ஸ்வாமிநியாய் என்றது பிள்ளைகளாகிய சொத்தையுடையவளாய் என்றவாறு. பிராட்டியார் ஸர்வலோகமாதாவாயிருக்கிறாளாதலால் ஸர்வலோகத்திலுமுள்ள எல்லாச் சேதனர்களும் பிராட்டியாருடைய புதல்வர்களாவார்கள். இப்புதல்வர்களை உடையவளாயிருப்பதால் ஸ்வாமிநியாய் என்று சொல்லப்பட்டது. ப்ராப்யையாயிருக்கும் என்றது பிரயோஜனபரையாயிருப்பாள் என்றவாறு. எல்லோரும் பிராட்டியாரைப்

குணங்களைக் கிளப்பி, நமக்குப் புருஷகாரபூதையாய், மாதாவாய், ஸ்வாமிநியாய், ப்ராப்யையாயிருக்குமென்று பிராட்டியை நினைப்பான்.

(9) ஸ்ருஷ்டி காலத்திலே ஶரீரத்தையும் இந்திரியங்களையும் தந்து, அந்தர்யாமியாய் நின்று ஸத்தையை நோக்கி, அத்வேஷத்தையும் ஆபிமுக்யத்தையும் ஸத்ஸங்கதி தொடக்கமான ஆத்ம குணங்களையும் பிறப்பித்து ஸதாசார்யனோடே சேர்த்து, நம்முடைய ஸர்வாபராதங்களையும் பொறுத்து, ஸம்ஸார ஸம்பந்தத்தையும் கழித்து, அர்ச்சராதி மார்க்கத்தையும் பரமபதத்தையும் குணாநுபவத்தையும் தந்து, யாவதாத்மபாவி நித்ய கைங்கர்யங்கொள்ளும் ஸ்வாமி என்று ஸர்வேஶ்வரனை நினைப்பான்.

---

புருஷகாரமாகப் பற்றி எம்பெருமான் திருவடியையடைந்து உஜ்ஜீவிக்க வேண்டியிருப்பதால் ப்ராப்யையாய் என்று சொல்லப்பட்டது. 'எல்லார்க்கும் இவளைப் பற்றி ஸ்வரூப லாபமாய்' என்று அருளிச் செய்ததும் இங்கறியத்தக்கது. பிராட்டியை நினைப்பான் என்றது பெரிய பிராட்டியாரை இவ்வாறு கருதக்கடவன் என்றவாறு.

(9) சிருஷ்டி காலத்திலே சரீரத்தையும் இந்திரியங்களையும் தந்து என்றது உலகத்தைச் சிருஷ்டிக்கின்ற காலத்தில் ஆத்மாக்களுக்குச் சரீரங்களையும் கரணங்களாகிய இந்திரியங்களையும் கொடுத்து என்றவாறு. ஆத்மாக்கள் மெழுகில் ஒட்டிய பொன்னைப் போல உருமாய்ந்து மூலப்ரக்ருதியில் கிடந்த காலத்தில் பரமகாருணிகனாகிய ஸர்வேச்வரன் இவை தன்னை அறிந்து உய்வதற்காக இவற்றிற்குச் சரீரேந்திரியாதிகளைக் கொடுத்தானென்று அறியத்தக்கது. அந்தர்யாமியாய் நின்று ஸத்தையே நோக்கி என்றது உள்ளேயிருந்து நியமிப்பவனாய் நின்று ஆத்மாக்கள் நிலைபெறுதலை ஆராய்ந்து என்றவாறு. ஸர்வேசுவரன் தன் சக்தியால் எங்கும் நிறைந்து நில்லாதபோது யாதும் நிலைபெற்றிராது. அவனுடைய நித்யேச்சையாலன்றோ ஆத்மாக்கட்கு நித்யத்வமுள்ளது. "உகைக்குமேல், எத்தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும் அப்போதொழியும்" என்றபடி அவன் உபேக்ஷித்தால் சக்திமான்களுடைய சக்திகளெல்லாம் அழிந்து விடுமன்றோ! அத்வேஷத்தையும் என்றது த்வேஷமின்மையையும் என்றவாறு. ஆபிமுக்யத்தையும் என்றது எதிர் முகமாக்கலுமென்றவாறு. நெடுநாள் ப்ரக்ருதி வாஸனையால் பகவத் விஷயத்தில் சிறிதும் ஏறிட்டுப் பாராமல் முகத்தை மாறவைத்துக் கொண்டு போந்தவனை ருசியுண்டாக்கி எதிர்முகமாகப் பார்க்கும்படி செய்வதாம். ஸத்ஸங்கதி தொடக்கமான ஆத்ம குணங்களையும் பிறப்பித்து என்றது ஸத்துக்களுடைய தொடர்பு முதலான ஆத்ம குணங்களையுமுண்டாக்கி என்றவாறு. ஸதாசார்யனோடே சேர்த்து என்றது எப்பொழுதும் ஹிதோபதேசஞ்செய்யும் ஆசார்யனிடத்திற் சேர்த்து என்றவாறு. நம்முடைய ஸர்வாபராதங்களையும் பொறுத்து என்றது, நாம் செய்த எல்லாப் பாபங்களையும் பொறுத்து என்றவாறு. காருண்யரூபையான பெரிய பிராட்டியாரும் 'இந்தச் சேதனன் மஹாபாரதஞ் செய்தவன்; இவனை ஒருபொழுதும் அங்கீகரிக்கலாகாது' என்று குற்றங்களை எடுத்துக் காட்டியவிடத்திலும் 'என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்' என்று பிராட்டியாரோடு மறுதலித்துப் பொறுத்துக் கொள்ளும் இயல்பினனென்பதாம். ஸம்ஸார ஸம்பந்தத்தையுங் கழித்து என்றது பிறந்திறந்துழல்கிற மஹா துக்கத்தையுமொழித்து என்றவாறு. யாவதாத்மபாவி என்றது ஆத்மாவுள்ளளவும் என்றவாறு, நித்ய கைங்கர்யங் கொள்ளும் ஸ்வாமி என்றது நித்ய பணிவிடையைக் கொள்ளுகின்ற ஸ்வாமி என்றவாறு. ஸர்வேசுவரனை நினைப்பானென்றது எம்பெருமானை இங்ஙனம் கருதக் கடவன் என்றவாறு.